# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ்: 5 | ஜூலை 2017 | வருடச் சந்தா ரூ. 100/- Volume : 4 | Issue: 5 | July 2017 | Annual Subscription Rs. 100/-





## பூரண அறிவு

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்




நாம் அடைந்த ஞானமும், முக்தியும், அனைத்தையும் தெரிந்து கொண்டதால் ஏற்பட்ட ஒன்று அல்ல. நமது அறிவின் இயலாமையை – எல்லையைப் புரிந்து கொண்ட ஓர் எளிமையான நிலைதான் ஞானம். பிரபஞ்ச இரகசியங்கள் நமக்குத் தெரியவில்லை என்பதை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதும் ஞானத்தின் அடையாளமே. ஆகவே அவையெல்லாம் நமக்குத் தேவையற்ற ஒன்றாகக் கருதி நமது தேடுதல்கள் அனைத்துக்கும் முற்றுப் புள்ளி வைத்து விடவேண்டும்.

- ஸ்ரீ பகவத்

சிந்தனையும் சிந்திப்பும்

ஞானத்திறவுகோல்



₹ 10/-

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu, INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655


# சிந்தனையும் சிந்திப்பும்

## (Thought and Thinking) – புதிய நூல்

சிந்தனை (Thought) என்றால் என்ன, சிந்திப்பு (Thinking) என்றால் என்ன என்பதை பிரித்து புரிந்து கொண்டாலே போதும், ஆன்மீகத்தில் தேடுதல் இல்லாதவர்களால் கூட ஞானத் தெளிவு பெற்று மனப் பிரச்சினையில் இருந்து விடு பட்டு விடுதலையை பெற முடியும் என்பதை விளக்கிச் சொல்கிறது இந்நூல்.

மனம் என்னும் மர்ம முடிச்சுகள் நிறைந்த பூட்டைத் திறக்கும் மிகச் சிறிய சாவிதான் இந்நூல். இமயமலையைப் போன்றிருக்கும் நமது பிரச்சினைகளுக்கெல்லாம் இப்படியும் ஒரு தீர்வு இருக்க முடியுமா என ஆச்சரியபட வைக்கும் இந்நூல், தீயப் பழக்கங்களில் இருந்து விடு படுவதற்கு வழி வகுப்பதோடு பல பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு கூட கல்விக்கு தடையாக இருந்த பல மனப் பிரச்சினைகளில் இருந்து விடு பட்டு கல்வியின் பக்கம் கவனம் திரும்புவதற்கும் தீர்வாக அமைகிறது.

வாழ்க்கையில் தொழிலில் வீழ்ச்சி, குடும்பப் பிரச்சினை, காதலில் தோல்வி, தாழ்வு மனப்பான்மை போன்ற பிரச்சினைகளால் மனப் பாதிப்படைந்தவர்களுக்கும் அதிலிருந்து விடு பட்டு வெற்றி பெற தீர்வாக அமைகிறது இந்நூல்.

இலட்சக்கணக்கானோரின் இதயப் புண்களைக் குணமாக்கி அவர்களையெல்லாம் மீட்டுக் கொடுத்த இந்நூல் மேலும் பலருக்கு பயன்பட வேண்டுமென்ற நோக்கில் **பரிசில் விலையில் ரூ.10க்கு 7000 பிரதி அச்சிட்டு ஜுலை ஞானமுகாமில் வெளியிடபட உள்ளது.**

இந்த ஞானத் தெளிவை தன் நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கு கொண்டு செல்ல விரும்புவர்கள் பரிசில் விலையில் உள்ள இந்த நூலை வாங்கி திருமண நிகழ்ச்சிகளிலும் மற்ற விழாக்களிலும் நன்கொடையாக வழங்கலாம்.

ஆன்மிக உலகில் புது மலர்ச்சியை ஏற்படுத்தியுள்ள இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற பரந்த நோக்கில் இந்நூல் செலவுகள் அனைத்தையும் ஏற்று பரிசளிப்பு விலையில் வழங்கும் அருளாளர்கள்:

1. திரு. **மோகன்ராம்,** சென்னை
2. திரு. **தனசேகரன்,** ஆரணி, திருவண்ணாமலை
3. திருமதி. **வசந்தி சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை.
5. திரு. **சதீஷ்குமார்,** USA.
6. திரு. R. **பாரதிராஜா,** ஹைதராபாத்.
7. திரு. M.S. **முருகவேல்,** சென்னை.

நன்கொடை வழங்கியவர்களுக்கு உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். நூல் பிரதிகளுக்கு...

ஸ்ரீபகவத் மிஷன்,
சேலம்.
99942 05880 / 97891 65555




# பூரண அறிவு

– ஸ்ரீ பகவத்



அவர் இவ்வாறு கூறினார்:

“நான் ஆன்மிக அமைப்புகள் பலவற்றில் பயிற்சி எடுத்து பலன் பெற்றுள்ளேன். எனக்கு முன்னால் எவர் உட்கார்ந்திருந்தாலும் அவர் தன்னுடைய மனதில் என்ன நினைக்கிறார் என்பது எனக்குத் தெரிந்துவிடும். அதுபோல் நான் எனது சூட்சுமசரீரத்தின் மூலம் உடலைவிட்டு வெளியே பல இடங்களுக்கும் சென்றுவர முடிந்தது. சிலருடைய நோய்களைக் குணமாக்கும் ஆற்றலும் எனக்கு ஏற்பட்டிருந்தது. ஆனால் எனது தேடுதல் நிறைவடையவில்லை. தங்களிடம் வந்ததும் எனக்கு எல்லாமே நிறைவடைந்ததைப் போன்று இருக்கிறது. எதைத் தேடித்தேடி அரும்பாடுபட்டேனோ அது கிடைத்ததுபோல் இருந்தது. தங்கள் கருத்துகளில் எந்தக் குழப்பமோ, குறைபாடுகளோ இல்லை. அதுபோல் நான் புரிந்து கொண்டதிலும் எந்தக் குறைபாடும் இல்லை...

“இந்தப் புரிதல் ஏற்பட்டபிறகு நான் நிம்மதியாக இருந்தேன். இப்போதும் எனக்கு அடைவதற்கு எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆயினும் எனக்குள் ஏதோ ஒரு நிறைவின்மை இருப்பதாகத் தோன்றுகிறது. தெரியவேண்டியதையெல்லாம் தெரிந்து கொண்ட பிறகும் எதனால் இப்படி ஒரு நிறைவின்மை தோன்றுகிறது?”

அவர் இவ்வாறு கேட்டு முடித்தார்.

அவருக்கு நாம் கொடுத்த விளக்கமே இந்தக் கட்டுரையாக அமைந்துள்ளது.

தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒருவர் அமெரிக்காவில் இருக்கிறார். அவருக்கு எதிர் காலத்தைப் பற்றித் தெரியவேண்டும் என்று ஆர்வம். நாளைக்கு நடக்கப் போவதை நான் இன்றே தெரிந்து கொண்டாக வேண்டும் என்று முயற்சி செய்தார். அதற்கான சிரியாயோக சாதனைகளில் ஈடுபட்டார். கடும்பாடுபட்டு முயன்ற அவர் பன்னிரண்டு வருடச் சாதனைகளுக்குப் பிறகு வெற்றி வாகை சூடினார்.

எந்த சக்தியை அடையப்பாடுபட்டாரோ அதனை அடைந்துவிட்டார். அதுவும் ஒருநாள் இரண்டு நாள் முயற்சியல்ல. 12 வருடங்கள் அதற்காக முயன்றதன் விளைவாகத்தான் அவருக்கு அந்த சக்தி கிடைத்தது.

அத்தனை வருட முயற்சிக்குப் பிறகு ஏற்பட்ட வெற்றியைக் கண்டு அவர் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்திருக்க வேண்டும்?

அவர் தனது சென்னையிலிருக்கும் சகோதரனுக்கு போன் செய்து விபத்தைச் சொன்னார்.

“பன்னிரண்டு வருடம் கஷ்டப்பட்டு, நான் இந்த நிலையை அடைந்து விட்டேன். ஆனால் தயவுசெய்து எவரும் இந்த முயற்சியில் ஈடுபட்டு விடாதீர்கள். நான் மாட்டத் தெரியாமல் வந்து மாட்டிக் கொண்டேன்.”

– இப்படி அவர் தனது நிலையை விளக்கினார்.

நாளை என்ன நடக்கப் போகிறது என்பதை முன் கூட்டியே தெரிந்து கொள்வதால் என்ன இலாபம்?

நாளைக்கு நமக்குப் பிடித்தமான ஒன்று நடப்பதாக இருந்தால் முன்கூட்டியே மகிழ்ச்சியடையலாம். நாளைக்கு வரக்கூடிய ஆபத்துகளும் கஷ்டங்களும் முன்கூட்டியே தெரிந்தால் அது தேவையற்ற சுமைதானே?

மாற்ற முடியாத கஷ்டங்களை முன் கூட்டியே தெரிவதால் என்ன இலாபம்?

நாரதர் தனது குருவிடம் இப்படிக் கூறியதாகக் கூறுவார்கள்:

“குரு சிரேஷ்டரே! நான் சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம் ஆகியவை பற்றிய இரகசியங்களையெல்லாம் அறிந்துவிட்டேன்...

“ஆனால் ஆன்மாவைப் பற்றி மட்டும் எனக்கு எதுவுமே தெரியவில்லை. எனது உண்மையான நிலை ஆன்ம சொரூபம் என்று கூறுகிறார்கள். அதை எனக்குப் போதியுங்கள்.”

நாரதர் இப்படிக் கூறுகிறார்.

ஆன்மாவை நாம் ஏன் அறிய வேண்டும்?

இரவில் வீட்டுக்குள்ளிலிருந்து வெளியே வருகிறோம். வாசலில் படுத்துக் கிடக்கும் பாம்பைக் கண்டு பயந்து நடுங்குகிறோம்.

வீட்டுக்குள் சென்று கம்பையும், விளக்கையும் எடுத்து வருகிறோம். விளக்கு வெளிச்சத்தில் பாம்பைப் பார்க்கிறோம். அது பாம்பல்ல வெறும் கயிறு என்று தெரிகிறது.

பாம்பினால் ஏற்பட்ட பயமெல்லாம் மறைந்து விடுகிறது.

இப்படி நாம் அழியக் கூடிய உடல்ல அல்ல; நாம் அழிவற்ற ஆன்மா என்பதைத் தெரிந்து கொள்வோமானால் அழிந்து போகும் உலக அம்சங்களினால் நாம் பாதிப்பு அடையமாட்டோம். கயிறைத் தெரிவதால் பயம் போய்விடுகிறது. நாம் ஆன்மா என்பதை அறிந்துகொள்வோமானால் பந்தமெல்லாம் போய்விடுகிறது. அதனால் நமக்குக் கிடைப்பது விடுதலை அல்லது முக்தி.

எனவே நாம் நம்முடைய முக்திக்காக ஆன்மாவைத் தெரிந்து கொள்வது முக்கியமாகிறது.

ஆனால் நித்திய வஸ்துவான ஆன்மாவை நம்மால் அறியமுடியுமா?

ஆன்மாவை அறிமுகப்படுத்தும் சாஸ்திரங்களே ஆன்மாவை, ஓர் அறியப்படும் பொருளாக அறியமுடியாது என அறுதியிட்டுக் கூறுவிடுகின்றன.

ஆனாலுங்கூட பிரபஞ்ச இரகசியங்களை அறிவதையும் விட ஆன்மாவை அறிவதும், முக்தி அடைவதும் தான் சிறப்பு என அந்த சாஸ்திரங்கள் அனைத்தும் ஏகோபித்துக் கூறிவிடுகின்றன.

அக்காலத்து சாஸ்திர அணுகுமுறை இதுதான்.

மாடிப்படிக்கட்டில் ஏறும்போது, கீழ்ப்படிகட்டில் உள்ள நமது காலை எடுக்க வேண்டுமானால், மேற்படிக்கட்டில் இன்னுமொரு காலை ஊன்ற வேண்டும்.

அப்படி நாம் ஊன்றி நிற்க வேண்டிய ஓர் இடமாக ஆன்மாவைக் கூறி, உலக பந்தங்களிலிருந்து நமது கால்களை எடுப்பதற்கு சாஸ்திரங்கள் வழிகாட்டுகின்றன.

அடைவது என்ற மொழியிலேயே விடுவதைக் கற்பிக்க முயல்கின்றனர்.

மரத்திலிருந்து தரையில் குதிப்பதற்கு என்ன செய்ய வேண்டும்?

“மரத்திலிருந்து நேரடியாகக் கீழே குதிக்கக் கூடாது. அது மிகவும் ஆபத்து. ஆகவே முதலில் மரத்திலிருந்து விடுபட்டு ஆகாயத்தில் இறங்கி நின்று கொள்ள வேண்டும். பிறகு அங்கிருந்து தரையில் குதித்து விட வேண்டும்.”

– இப்படி வழி காட்டப் பட்டது.

கேட்பதற்கு நன்றாகத்தான் உள்ளது.

ஆனால் இதன் நடைமுறை சாத்தியம் எப்படி இருக்கிறது?

மரத்திலிருந்து ஆகாயத்தினுள் இறங்கலாம். ஆனால் ஆகாயத்தினுள் நின்று கொள்வது தான் சாத்தியமில்லை. ஆகாயத்தின் மீது இறங்கி நிற்பதும் ஒன்று தான் மரத்திலிருந்து தரையில் குதிப்பதும் ஒன்றுதான்.

மனதானது ‘அடைதல்’ எனும் இயக்கத்திலிருந்து ‘விடுதல்’ எனும் இயக்கத்துக்கு மாறுவதுதான் முக்திநிலை.

மனதானது ஆன்மாவை அறிவதாக எண்ணி மன இயக்கத்திலிருந்து குதித்து விடுகிறது. – விடுபட்டு விடுகிறது.

ஆன்மாவை அறிவது என்பதும் ஒன்றுதான்; ஆகாயத்தில் இறங்கி நிற்பது என்பதும் ஒன்று தான். மனதை அதன் இயக்கதிலிருந்து விடுவிக்கும் யுக்தியாக ‘‘ஆன்மாவை அறிதல்’’ என்பது அறிமுகம் செய்யப்பட்டுள்ளது.

பிரபஞ்ச மனமாக இருக்கும் ஈஸ்வரனின் ஒரு பகுதியாகத் தான் ஜீவன் எனும் தனிப்பட்ட மனம் உருவாகியுள்ளது.

தனிப்பட்ட ஒன்றாக, ஜீவ வியக்தியுடன் செயல்படும் தனி நபராக நாம் மாறிவிடுகிறோம். தனித்தன்மையை வைத்துக் கொண்டிருக்கும் வரை நாம் ஜீவனாக இருக்கிறோம். தனித்தன்மையை விட்டுவிடும் நிலையில் நாம் ஈஸ்வரனாகி விடுகிறோம்.

ஈஸ்வரனுக்கு பஞ்ச கிருத்தியங்கள் – ஐந்தொழில் செய்யும் ஆற்றல் உண்டு. படைத்தல், காத்தல், அருளல், மறைத்தல், அழித்தல் என்னும் ஐந்தொழில் புரியும் ஆற்றல் ஈஸ்வரனுக்கு உண்டு. அத்தகைய சக்தி, ஈஸ்வரனின் பகுதியான ஜீவனுக்குக் கிடையாது.

ஜீவனானது உடலோடு இணைந்து செயல்படும் அம்சத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. உடலோடு செயல்படும் ஜீவனுடைய இலக்கு முக்தி மட்டுமே. பஞ்ச கிருத்தியங்களைப் புரியும் சக்தியை அடைவது ஜீவனுடைய இலக்கு அல்ல.

உடலுடன் செயல்படும் நம் மனதுக்கு யோக சாதனைகளின் மூலம் தனது சக்தியின் எல்லையை விரிவாக்கிக் கொள்ளவும் முடியும். அப்படி சக்திபெற்ற ஜீவன் சில சித்துக்களோடு செயல்படுகின்றது.

முழுக்கிணற்றையும் நாம் நமது யோகசாதனைகள் மூலம் தாண்டிக்குதித்து விட்டோமானால் நாம் அனைவருமே ஈஸ்வரனாகி விடுகிறோம்.

முழுக்கிணற்றைத் தாண்டாதவர்கள் கிணற்றுக்குள்தான் விழுந்தாக வேண்டும்.

அப்படிக் கிணற்றுக்குள் விழுந்தவர்களை சாத்தான்கள் என சில மதத்தவர்கள் கூறுகின்றனர். சில மதத்தவர்கள் அவர்களுக்குப் புனிதமான பெயர்களைக் கொடுத்ததும் கௌரவிக்கின்றனர்.

அரைக்கிணறைத் தாண்டுவது ஆபத்தானது என்பது அனைவரும் அறிந்ததே.

அதனால்தான் ஞானிகள் அனைவரும் இத்தகைய சித்துக்களையும் சக்திகயையும் பழித்துக் கூறுகின்றனர். ஆனால் முக்தியைப் பழித்துக் கூறும் ஞானிகள் எவரும் இலர்.

முக்தியடையும் அனைவரும் தங்கள் தனித்தன்மையை இழந்துவிடுகின்றனர். ஆயினும் உடலோடு செயல்படும் காரணத்தினால் அவர்கள் ஈஸ்வர அம்ச சக்திகளோடு இணையாமல் இருக்கிறார்கள்.

முக்தியடைந்த ஜீவர்கள், உலக நன்மையின் பொருட்டு புதியதொரு பிறவியை எடுக்க விளையாத பட்சத்தில் அவர்கள் ஈஸ்வர அம்சத்தோடு மீண்டும் இணைந்து விடுகிறார்கள்.

முக்தியடைந்த முக்தர்கள் அனைவரும் சித்திகள் பெற்ற சித்தர்களாக இருக்க வேண்டும் என்ற நியதி கிடையாது.

அதுபோல் சித்திகள் பெற்ற சித்தர்கள் அனைவரும் முக்தியடைந்திருப்பார்கள் என்றும் கூறமுடியாது.

முக்தியடைந்த ஒருவரது செயல்பாடு எப்படி இருக்கும்?

மனதை எந்த அம்சத்திலும் வடிவமைக்க முயலாமல், மன இயக்கத்தை சுதந்திரப் பிரவாகமாக விடுவதுதான் முக்தி.

அது பிரவாகமாகச் செயல்படும் காரணத்தினால் அதற்கு நிரந்திரமான வடிவம் எதுவும் கிடையாது. எந்த வடிவத்தை வேண்டுமானாலும் அது எடுத்துக் கொள்ளும். ஆனால் எந்த வடிவத்தையும் அது தனதாக்கிப் பிடித்து வைத்துக் கொள்ளாது.

அதனால் அதுவால் தன்னை உயர்நதவனாக் கருதில் பெருமிதங் கொள்வது சாத்தியமில்லை. அதுபோல் தன்னை அது இழிந்தவனாகக் கருதி வருந்துவதற்கும் வாய்ப்பில்லை.

எல்லா அனுபவங்களும் – வடிவங்களும் ஏற்படத்தான் செய்யும். ஆனால் எந்த வடிவத்தையும் – அனுபவத்தையும் தக்க வைத்துக் கொள்ளும் பிடிவாதம் – கட்டு, பந்தம் இருக்காது.

இதுதான் முக்தி நிலையின் நடைமுறை உண்மை – யதார்த்தம்.

நமது கருத்துகளில் தெளிவடைந்த பலர் முக்தி நிலையில் இருக்கிறார்கள்.

உலக வாழ்க்கையைப் பொறுத்த வரையிலும் அவர்கள் ஒரு சாதாரண மனிதராகவே சராசரியான தொழில்களில் ஈடுபட்டு வருகிறார்கள்.

அகத்தளவில் அவர்கள் முக்தர்களே. அதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

ஆனால் ஜகத்தளவில் – உலகைப் பொறுத்தவரையிலும் அவர்கள் வெறும் சாமான்ய மனிதர்களே.

நாம் ஏற்கனவே "ஞானியும் குருவும்" என்ற தலைப்பில் ஞானிக்கும் குருவுக்கும் உள்ள வித்தியாசங்கள் என்ன என்பதைப் பார்த்தோம்.

எவர் வேண்டுமானாலும் ஞானியாகி விடலாம். ஆனால் அப்படி ஞானம் பெற்ற அனைவரும் அடுத்தவருக்கு போதனை செய்து அடுத்தவர்களையும் ஞானியாக்கும் தேர்ச்சி – **Skill** உடையவர்களாக இருப்பார்கள் என்று கூற முடியாது.

எவரோ ஒரு சிலரால் தான் அப்படி எடுத்துக் கூறி விளங்க வைக்க முடியும். அப்படி விளக்கிக் கூறும் ஒரு சிலர்தான் மாஸ்டர்கள் என்றும் மகான்கள் என்றும் சமுதாயத்தால் அங்கீகரிக்கப்படுகிறார்கள்.

அப்படி விளக்கிக் கூறும்திறமையுள்ள பலர் மாஸ்டர்களாகக் கூட இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஞானத்தையும், முக்தியையும் அடையாதிருக்கிறார்கள்.

ஞானமடைதலும், முக்தராக இருப்பதும் தான் முக்கியமே தவிர மாஸ்டர்களாக – குருவாக இருப்பது முக்கியமல்ல.

ஞானமடைந்த – முக்தியடைந்த ஒருவருக்கு பிரபஞ்ச இரகசியங்களெல்லாம் தெரிந்திருக்குமா?

–தெரிந்திருக்க வேண்டுமா?

உலகம் எவ்வாறு தோன்றியது? உயிர்கள் எவ்வாறு தோன்றியுள்ளன? பிறவிகள் எவ்வாறு நிகழ்கின்றன?

–என்பன போன்ற இரகசியங்களெல்லாம் அவருக்குத் தெரிந்திருக்குமா?

இத்தகைய அதீதமான ஆற்றல்களைக் கூட ஒருவர் அடையலாம்.

இவையெல்லாம் யோக சாதனைகளின் விளைவாக ஒருவருக்கு ஏற்படக் கூடியவை.

இத்தகைய சக்திக்கும், முக்திக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது.

ஆனால் அவற்றையெல்லாம் அடையும் முயற்சியில் யோக சாதனைகளில் ஈடுபடுவோமேயானால்.

அது நம்மை சாத்தானுக்கும் முயற்சியாகவே முடிந்துவிடும்.

(இது சம்பந்தமான விரிவான விவரங்களுக்கு கடவுளும் சாத்தானும் என்னும் கட்டுரையை நாடவும்)

நமக்குத் தெரியாத எத்தனையோ விபரங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

அதையும் நாம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் தருணத்தில்

"நாம் அடையவேண்டியது இன்னும் ஏதாவது இருக்கின்றதோ?'' என்ற எண்ணம் ஏற்படவும் வாய்ப்புள்ளது.

நாம் அடைந்த ஞானமும், முக்தியும், அனைத்தையும் தெரிந்து கொண்டதால் ஏற்பட்ட ஒன்று அல்ல.

நமது அறிவின் இயலாமையை – எல்லையைப் புரிந்து கொண்ட ஓர் எளிமையான நிலைதான் ஞானம்.

அறிவினுடைய எல்லையை விரிவாக்குவது ஞானமல்ல.

பிரபஞ்ச இரகசியங்கள் நமக்குத் தெரியவில்லை என்பதை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதும் ஞானத்தின் அடையாளமே.

அது நமக்குத் தேவையற்ற ஒன்றாகவும் உள்ளது. அந்த இரகசியங்களை அறிய வேண்டுமானால் மீண்டும் ஆன்மிகத்தில் **LKG, UKG** வகுப்பில்தான் சேர்ந்தாக வேண்டும்.

ஆகவே அவையெல்லாம் நமக்குத் தேவையற்ற ஒன்றாகக் கருதி நமது தேடுதல்கள் அனைத்துக்கும் முற்றுப் புள்ளி வைத்து விடவேண்டும்.

இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் கேள்வி கேட்ட அன்பரும் தனது தேடுதலை முழுமையாக முடித்துக் கொண்டார்.

அந்த அன்பருடைய நண்பருக்கும் இதைப் போன்ற கேள்வியே இருந்திருக்கிறது.

அது என்ன பிரச்சினை என்பதே புரியாததால் அதை எப்படிக் கேட்பது என்பதும் அவருக்குத் தெரியவில்லை.

அந்த அன்பருக்குக் கொடுத்த விளக்கம் இவரையும் முழுமைப் படுத்திவிட்டது.





**K.S. ஜீவமணி**
செல் : 97891-65555



# கேள்வி? பதில்...

## பிரச்சினையை எதிர்கொள்ளும் போது மனம் டென்சன் ஆகாமல் அமைதியாக இருக்க என்ன செய்ய வேண்டும்?



**கேள்வி:** பகவத் ஐயாவின் நூல்களைப் படித்துள்ளேன். எனக்கு பிடிக்காத புற நிகழ்வுகளால் மனம் பாதிப்படைகிறது. "மன பாதிப்பை சரி செய்ய அகத்தளவில் எதுவும் செய்யத் தேவையில்லை" என்று கூறுகிறீர்கள். புறத்தில் பிரச்சினை ஏற்படும் போது மனதில் தான் துன்பமும் துயரமும் ஏற்படுகிறது. மனதில் ஏற்படும் துன்பத்தையும் துயரத்தையும் எவ்வாறு போக்குவது? சும்மா இருந்தால் சரியாகுமா? பிரச்சினைக்குரிய நிகழ்வு புறத்தில் ஏற்பட்டாலும் மனம் டென்சன் ஆகாமல் அமைதியாக இருக்க என்ன செய்ய வேண்டும்? மனம் பக்குவமடைய தியானம், பயிற்சி, முயற்சி தேவையில்லையா?

**பதில்:** நம் அனைவருக்குமே விருப்பு, வெறுப்பு என்பது வேறுபட்டது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு இயல்பில் இருக்கிறோம். ஒவ்வொருவருக்குமே பிடிக்காத நிகழ்வு ஏற்படும் போது மனம் பாதிப்படைவது தான் இயல்பு. இங்கு மனம் பாதிப்படைவது இயற்கை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

நாம் நம்மை சுற்றியுள்ள உலகை மனதின் வழியாகத்தான் புரிந்து கொள்ள முடியும். நமக்கு ஏற்படும் இன்பம், துன்பம், துயரம், கோபம், பயம் என எல்லா உணர்வுகளும் மனதிலேயே ஏற்படுகிறது. புறத்தில் ஏற்பட்ட பிரச்சினையைக் கூட மனம் எப்படிப் புரிந்து கொள்கிறதோ அப்படியே தான் நாம் புரிந்து கொள்கிறோம். மனம் எதைக் காட்டுகிறதோ அதையே உணர்கிறோம். மனம் காட்டாதது எதுவும் நமக்கு தெரியாது. மொத்தத்தில் மனதைக் கொண்டே நாம் வாழ்கிறோம். அதனால்தான் நமக்கு துன்பமோ துயரமோ அல்லது வேறு ஏதாவது மன பாதிப்போ ஏற்படும் போது "மனதை எவ்வாறு சரி செய்வது?" என்ற கேள்விக்கு வருகிறோம்.

மனம் என்பது பருப்பொருள் அல்ல. அலை வடிவமானது. புற நிகழ்வுகளை நம் மன இயல்பிற்கு ஏற்ப பிரதிபலிக்க கூடியது. பிரதிபலிப்புகள் அனைத்தும் தோன்றி மறைய கூடியது. நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப புதிது புதிதாக மாற கூடியது. தாமாக இயங்கக் கூடிய இயக்கம். இங்கு சரி செய்வதற்கோ, பக்குவமடைவதற்கோ என்று எதுவும் இல்லை.

சில நேரங்களில் புறத்தில் பிரச்சினை தொடர்ந்து நீடிக்கும் போது அதன் பிரதிபலிப்பாக மனதில் பாதிப்பு தொடர்ந்து நீடிப்பதுபோல் தோன்றும். இங்கு மன பாதிப்பிலிருந்து விடுபட்டு அமைதிக்கான முயற்சியில் இறங்கினால் சுய முரண்பாடு ஏற்பட்டு பாதிப்பு மேலும் அதிகமாகுமே தவிர குறையாது.

நாம் மனதின் மூலமாக பிரச்சினைகளை உணர்ந்தாலும் பிரச்சினையை தீர்க்க வேண்டிய இடம் புறம் மட்டுமே. புறப் பிரச்சினையை மனம் விருப்பு வெருப்போடு கலந்து பிரதிபலிக்கிறது அவ்வளவுதான்.

மனதில் தோன்றும் பிரதிபலிப்பின் துணையோடு புறப் பிரச்சினையை சரி செய்ய செயல் புரியலாம். ஆனால் பிரதிபலிப்பை சரி செய்ய வேண்டிய அவசியம் எதுவும் இல்லை.

மருத்துவத்துறையில் லேப்ராஸ்கோபிக் அறுவை சிகிச்சை (Laparoscopic Surgery) என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். உடலை கிழிக்காமல் துளையிட்டு உள் உறுப்புகளில் அறுவை சிகிச்சை நடக்கும் உள் உறுப்புகளின் பாதிப்புகளை ஒரு மானிட்டரின் வழியாக பார்த்துக் கொண்டு உள்ளே அறுவை சிகிச்சை செய்வார்கள். உள் உறுப்புகளின் நிலையும் அதில் உள்ள பாதிப்பும் மானிட்டரில் தெரியும். உள் உறுப்புகளின் பிரச்சினை மானிட்டரில் தெரிவதால் மானிட்டரில் பிரச்சினை என்று அர்த்தமல்ல. ஆனால் சரி செய்ய வேண்டிய இடம் உள் உறுப்பே ஆகும்.

மனம் என்பதும் இந்த மானிட்டரை போன்றதே. புற உலகையும் நிகழ்வையும் மனம் என்னும் மானிட்டர் வழியாகவே அறிகிறோம். ஆனால் நாம் செயல் புரிய வேண்டிய இடம் புறம் மட்டுமே. மனதின் துணை கொண்டு புறப் பிரச்சினைகளை உணர்ந்து கொள்ளலாம். ஆனால் நாம் செயல் புரிய வேண்டிய இடம் புறம் தானே தவிர, பிரச்சினைகளை காட்டும் மனதில் ஒரு போதும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

பிரச்சினைக்குரிய நிகழ்வு புறத்தில் ஏற்பட்டாலும் மனம் டென்சன் ஆகாமல் அமைதியாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது தேவையற்றது. அந்த சமயத்தில் ஏற்படும் டென்சனோ மன பாதிப்போதான் அந்த பிரச்சினைக்குரிய புறச்சூழ்நிலையை சரியாக எதிர் கொள்ள தூண்டுகோலாக அமைகிறது.

லேப்ராஸ்கோபிக் அறுவை சிகிச்சை மானிட்டரின் துணைக்கொண்டே உடல் உள் உறுப்புகளில் அறுவை சிகிச்சை நடைபெற்று பிரச்சினை சரி செய்யப்படுகிறது. நமது செயல் உடல் உறுப்புகளில் உள்ள பிரச்சினையின் பக்கம் திரும்பாமல் மானிடரில் தெரியும் காட்சியில் தான் பிரச்சினை என்று மானிடரில் செயல்புரிந்தால் மானிடர் பழுதாவதுடன் உண்மையான பிரச்சினையும் தீர்வாகாது.

அதுபோல் 'மனதை எப்போதும் அமைதியாக வைத்திருப்பேன்' என்று பயிற்சி முயற்சி செய்வது மனதை போராட்டகளமாகவே மாற்றி விடும்.

மனம் என்னும் மானிட்டரை புறச் செயல் செய்வதற்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் மனம் எனும் மானிட்டரை சரி செய்யத் தேவையில்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

**"புறத்தில் திறம்பட செயலாற்ற அகத்தை பயன்படுத்திக் கொள்வது ஒன்றே வழி."**

# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்,

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும் கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் **புரவலர்** குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ.1000 முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ.12000 முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **வீரன்சுப்பு (எ) இராஜேஸ்,** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை,
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி.
6. திரு. அஃகு ஹீலர். **உமர் ஃபாரூக்,** கம்பம்.
7. திரு. **சேகர்,** கத்தார்.
8. திரு. **குணாலன்,** கோவை .
9. திரு. **சம்பத்,** சென்னை.
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்தி வேலூர்.
13. திரு. **பாரதிராஜா,** பரமத்தி வேலூர்.
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்.
15. திரு. **முரளி,** சென்னை.
16. திரு. **வீரப்பன்,** நெல்லை.
17. திரு. **அருணாச்சலம்,** நெல்லை.
18. திருமதி. **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை.
19. திருமதி. **வடிவம்மாள்,** சென்னை.
20. திரு. ஹீலர். **சுரேஷ்,** சென்னை.
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை.
22. திரு. **இரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை.
23. திரு. **பாலமுருகன்,** USA.
24. திருமதி. **சுரபி,** டெல்லி.
25. திருமதி. **வடிவாம்பாள்,** சென்னை.
26. திரு. **ஸ்ரீபகவத்மிஷன்,**வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்.
27. திரு. **கார்த்திக்,** போரூர், சென்னை.
28. திரு. **ராயன்,** திருச்செந்தூர்.
29. திரு. **யுகேஷ்குமார்,** சென்னை.

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம். வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem. என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை

## ஞானப் புரிதலில் ஏற்படும் சந்தேகங்களில் தெளிவு பெற...

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்கள் பல படித்திருந்தாலும் நடைமுறையில் நமக்கு ஏற்படும் ஐயங்களை ஐயாவிடம் கேட்டு தெளிவு பெறுவது மிகவும் அவசியம். இதனை கருத்தில் கொண்டு **Whatsapp Group** ஒன்று ஏற்படுத்தப் பட்டுள்ளது. இந்த குரூப்பில் தங்களை இணைத்துக் கொண்டு தங்களுக்கு ஏற்படும் கேள்விகளை இதில் தெரிவிக்கலாம். ஒவ்வொரு வாரமும் ஞாயிறு மாலை 6:30 மணி முதல் 8:00 மணி வரை **Google Hangouts** மூலம் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் நேரடி **(Live)** சத்சங்கம் நடைபெறும். இதில் நமது அனைத்து சந்தேகங்களுக்கும் ஐயாவிடம் இருந்து விடை பெறலாம். தங்களுக்கு ஏற்படும் ஐயங்களுக்கான பதில் மற்றவர்களுக்கும் பயனுள்ள வகையில் அமையும் என்பதால் இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்களது கேள்விகளை பதிவிடுவதற்கு **Scan QR or Barcode** என்ற **App** பயன்படுத்தி கீழ்கண்ட **QR- Code**-டை **Scan** செய்து **Whatsapp Group** –ல் இணைந்து கொள்ளலாம்.



மேலும் விபரங்களுக்கு : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை. **செல் : 95512 53636, 94444 02986**



K.S. ஜீவமணி
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

மனிதகுல வாழ்வுக்கு ஞானம் மிகவும் முக்கியமானது. இருப்பினும் ஞானம் தேவை என்று அறிந்தவர்கள் வெகு சிலரே. தேவை என்று அறிந்தவர்களில் அதை அடைந்தவர்கள் அதனினும் வெகு சிலரே. தேவை என்று அறியாதவர்களும் போராடிக் கொண்டிருக்கிறார்கள். தேடிக்கொண்டிருப்பவர்களும் போராடிக் கொண்டிருக்கிறார்கள்.

ஞானத் தேடுதலில் உள்ளவர்களில் பலர் "மனத் தூய்மை பெற வேண்டும். மனத் தூய்மையே முக்தியை கொடுக்கும்" என்று மனத் தூய்மைக்காக தியானமும் பயிற்சியும் செய்து போராடிக் கொண்டிருக்கிறார்கள். சாதாரண மனிதர்கள் "பிரச்சினைகளில் இருந்து விடுபட வேண்டும், துன்பத்தையும் துயரத்தையும் கொடுக்கும் மன உணர்வுகளில் இருந்து விடுபடவேண்டும்" என்று போராடிக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் இருவரின் போராட்டத்திற்கும் வேறுபாடு கிடையாது. இரண்டும் ஒன்றே.

ஞானம் பெற்றவர்கள் மட்டுமே போராட்டங்களை கை விட்டு விடுதலையோடு வாழ்ந்து வருகிறார்கள்.

வேறொரு ஆன்மிக அமைப்பைச் சேர்ந்த நண்பர் ஒருவர் கேள்வி ஒன்றை எழுப்பினார். மனம் போல் வாழ்வு; மனம் தூய்மை பெற்றால் மட்டுமே முக்தி நிலையை அடைய முடியும் என்று கூறுகிறார்கள். மனம் தூய்மை அடைய என்ன செய்ய வேண்டும்?

ஆன்மிகத் தேடுதலில் உள்ளவர்கள் மனத் தூய்மைக்காக போராடிக் கொண்டிருக்கிறார்கள். மனத் தூய்மைக்காக முயற்சி செய்து ஒரு போதும் மனத் தூய்மையை பெற முடியாது. "தெளிந்த நீரோடையை மீண்டும் தெளிய வைக்கிறேன் என்று கையை விட்டு கலக்கினால் என்ன ஆகும்?" மனத் தூய்மைக்காக முயற்சி செய்வதும் அதுவே. மனம் இயற்கையாகவே பிரவாகமான ஆறு போல் ஓடி தன்னைதானே தூய்மைப்படுத்திக் கொண்டு தூய்மையாகவே பிரவகித்துக் கொண்டிருக்கிறது.

ஓர் ஆற்றல் சாக்கடை நீர் கலந்தாலும் கூட அதன் பிரவாக ஓட்டத்தில் தன்னை தானே தூய்மைப்படுத்திக் கொண்டு சுத்தமான நீராக மாறி ஓடிக் கொண்டிருக்கிறது. நல்ல தூய்மையான நீரும் தேங்கி நின்றால் களங்கமடைந்து அசுத்த நீராக மாறி விடுகிறது.

மனமும் அதுபோலதான் துன்பத்தை தரும் மோசமான உணர்வுகூட அதன் இயற்கையான ஓட்டத்தில் ஓடி மறைந்து விடுகிறது.

நமக்கு தோன்றும் எண்ணங்களின் மீதும் உணர்வுகளின் மீதும் விருப்பு வெறுப்புடன் போராடும் போது மட்டுமே அவை மீண்டும் தேங்கி மனதை கெடுத்து விடுவதோடு உடலிலும் தேவையற்ற இரசாயன மாற்றத்தை ஏற்படுத்தி விடுகிறது.

ஒரு குழந்தையை எடுத்துக் கொண்டால் அதன் மனம் கள்ளங்கபடமற்ற தன்மையில் தான் இயங்கி வருகிறது.

கள்ளங்கபடமற்ற தன்மை என்பதும் தூய்மையான மனம் என்பதும் ஒன்றே. இதைத்தான் அறி நிலை, துரியம் என்றும் குறிப்படுகிறோம். இதுதான் மனதின் இயற்கையான நிலை.

உண்மையில் குழந்தைகளுக்கு மட்டுமல்ல அறிவு சார்ந்த பெரியவர்களுக்கும் மனம் கள்ளங்கபடமற்ற தன்மையில் தான் இயங்கி வருகிறது. குழந்தைகள் தன் மனதோடு முரண்படுவதில்லை. பெரியவர்கள் முரண்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த முரண்பாடே நம் மனப் பிரச்சினைகளுக்கு காரணமாகி விடுகிறது.

மனதை புறவேலைக்காக பயன்படுத்தலாம். மனமே மனதிற்கு எதிராக செயல்படும் போது தான் சுய முரண்பாடு ஏற்பட்டு விடுகிறது. நமக்கு தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் புறச் செயல்களை சிறப்பாக செயல்படவே வருகின்றன. உணர்வுகளையும் எண்ணங்களையும் சீரமைப்பது நமது வேலை அல்ல என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இந்த எளிய புரிதலே ஞானம். இந்த ஞானமே நமக்கு விடுதலையை கொடுக்கிறது. விடுதலைக்கு பிறகே மனத் தூய்மை என்பது தாமாக நிகழ்கிறது.

புறத்தை பொறுத்த வரை நமக்கு பல வேலைகள் – கடமைகள் உண்டு. அகத்தைப் பொறுத்த வரை புரிந்து கொள்வது மட்டுமே போதுமானது.

இத்தனை காலம் விடை கிடைக்காத புதிராக இருந்த ஞானத்தை, புரிதலாக எளிமைப் படுத்தி கொடுத்த ஸ்ரீபகவத் ஐயாவின் வருகை, மனித குலத்திற்கு இயற்கை கொடுத்த வரம். நமக்கு கிடைத்த வரத்தை அனைவருக்கும் கொண்டு செல்வொம்.

**மனத் தூய்மைக்கான முயற்சியை கை விடுவோம்.**

**வினைத் தூய்மையை கடமையென கொள்வோம்.**

# ஸ்ரீ பகவத் பவனில் 2 நாள் ஞானமுகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞானமுகாம் வருகின்ற அக்டோபர் மாதம் சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி **(Po.)**, சேலம்-636106.

நாள்: **14.10.17 சனிக் கிழமை காலை 8.00 மணி முதல்**
**15.10.17 ஞாயிறு மதியம் 3.00 மணி வரை**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை (13.10.17) மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஞானமுகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை **அனுமதி இலவசம்.**

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை **Oct Gnanamuhaam** என **Type** செய்து **SMS** அனுப்ப வேண்டிய **எண்: 99422 19065**
- முன் பதிவிற்கு இறுதி நாள் 20-09-2017

# பாதையால் வந்த பயன்



திருச்சி தமிழ்சங்க கட்டிடத்தில் 11.6.2017 ஞாயிற்றுக்கிழமை அன்று **படிப்போம்! பகிர்வோம்!** சார்பாக 3ம் ஆண்டு விழா சிறப்பாக நடைபெற்றது. விழாவின் போது திருச்சி பகவத் மிஷன் சார்பாக **பகவத் பாதை** மாத இதழை **V.J.சரண்குமார்** அவர்கள் வழங்க மதிப்பிற்குரிய நல்லாசிரியர் விருது பெற்ற **படிப்போம்! பகிர்வோம்!** அமைப்பின் தலைவர் **பு.வே.தேவராஜ்** மற்றும் பொறியாளர் **சீ.புண்ணியமூர்த்தி** காவேரி இன்ஜினியரிங் ஒர்க்ஸ் கீரனூர் அவர்களும் பெற்றுக் கொண்டனர். இதில் கலந்து கொண்ட அனைவருக்கும் நமது பகவத் பாதை மாத இதழல் வழங்கப்பட்டது. நமது **பகவத் பாதையில்** வந்த **"மாற்றி யோசி"** ஜென் கதையை மிக அற்புதமாக பயன் படுத்திய விநாடிவினா வேந்தர். **பேரா.ஜி.பாலகிருஷ்ணன்** ஐயா (ஓய்வு, ஜோசப்கல்லூரி, திருச்சி ) அவர்கள் அந்த கட்டுரைக்கு மேலும் சிறப்பு சேர்த்தார். **"படிப்போம்! பகிர்வோம்"** அமைப்பிற்கு நமது ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.


விடியலை நோக்கி விடுதலைக்கு விடை கண்டவர்


எளிமையின் திருவுருவமாய் ஸ்ரீ பகவத் ஐயா


ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
கத்தார் சேகர் அவர்கள்


மாலை நேர
மலையேற்றத்தின் போது


வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்


சென்னை அம்பத்தூர் சத்சங்கம்


ஓய்வு நேரத்தில்...


காலை நேர
நடை பயிற்சியின் போது

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவனின் செயல்பாடுகள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவுபெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்குவதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. நமது ஸ்ரீபகவத் பவன் ஜருகு மலை அடிவாரத்தில் அமைந்துள்ளதால் வரும் அன்பர்கள் காலை மாலை இருவேளையும் **Trekking** செல்வதற்கும் வாய்ப்பாக அமைந்துள்ளது.

ஜுலை மாதம் நடைபெற உள்ள ஞானமுகாமைத் தொடர்ந்து அக்டோபர் மாதம் 14 & 15 ஆம் தேதிகளில் 2நாள் ஞானமுகாம் நடைபெற உள்ளது. நமது ஸ்ரீபகவத் பவனில் நடைபெறும் அனைத்து நிகழ்ச்சிகளும் கட்டணம் எதுவும் இன்றி இலவசமாகவே நடைபெற்று வருகின்றன. ஸ்ரீபகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே அனைத்து செலவுகளையும் எதிர்கொண்டு வருகிறோம்.

எனவே பகவத் ஐயாவின் கருத்துக்களை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாக இணைந்து ஸ்ரீபகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்-1

# ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மதுரை வருகை

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஜுலை மாதம் 22ம் தேதி முதல் 29ம் தேதி வரை மதுரை, திருப்பரங்குன்றம், லைன் சிட்டி நகரில் உள்ள தனது இல்லத்தில் தங்கி இருப்பார்கள். அது சமயம் ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் முன்அனுமதி பெற்று ஐயாவை நேரில் சந்திக்கலாம்.

முன் அனுமதிக்கு :

99442 15677, 97891 65555, 99942 05880





# ஜென் கதை

## உயிரோட்டமான தோட்டம்

மன்னன் ஒருவன் ஆன்மீகத்தில் நாட்டம் கொண்டான். தன் மனதைத் தூய்மைப்படுத்தி ஞானம் பெறவும் இறை வழியில் வாழ்வைச் செலுத்தவும் அவன் மிகவும் விரும்பினான். அதற்காக ஜென் குரு ஒருவரை நாடினான். தான் மனம் தூய்மை பெற என்ன செய்ய வேண்டும் என விளக்குமாறு அவரை வேண்டினான்.

மனத்தூய்மை என்று எதைக் குறிப்பிடுகிறாய்? என்றார் குரு. தேவையற்ற பயம், கோபம், காமம் போன்ற மோசமான உணர்வுகள் மறைந்து ஆனந்தமும் அமைதியும் மட்டுமே நிலைக்க வேண்டும் என்றான் மன்னன்.

அப்படி என்றால் ஒரு தோட்டம் போடு என்றார் அந்த குரு.

போட்ட பிறகு? என வினவினான் மன்னன்.

நீர் பாய்ச்சு.. என்றார் குரு.

பிறகு..? என்றான் மன்னன் வியப்புடன்.

# ஜென் கதை

தொடர்ச்சி...

மரம் வளர்... என்றார் குரு.

சரி. செய்கிறேன். பிறகு..?

பராமரித்து வா... என்றார் அவர்,

இந்தப் பதிலில் ஏதோ பொருள் புதைந்து இருக்கிறதென்று உணர்ந்த மன்னன் ஆயிரக்கணக்கான ஆட்களின் துணையுடன் சில ஆண்டுகள் பெரும்பாடுபட்டு அற்புதமான ஒரு தோட்டத்தை உருவாக்கினான். இப்போது அந்தத் தோட்டம் ஏராளமான மரங்களுடன் பச்சைப் பசேலெனப் பூத்துக் குலுங்கியது. பார்க்கும்போதே மனதிற்கு இதமளித்தது அது. அத்துடன் மிகவும் ரம்மியமாவும் காட்சியளித்தது.

தன் தோட்டத்தை வந்து பார்வையிடும்படி மன்னன் குருவைப் பணிவுடன் ஒருநாள் வேண்டிக் கேட்டுக் கொண்டான். அவரும் மறுநாள் வருவதாகச் சொல்லியனுப்பினார்.

தன் குருவை வரவேற்க மன்னன் தடபுடலான ஏற்பாடுகளைச் செய்தான். வேலையாட்களை ஏவித் தோட்டத்தைத் துப்புரவாகப் பெருக்கி ஒரு சருகு, சுள்ளி, காய்ந்தஇலை கூட இல்லாமல் பளிச்சென இருக்கும் படி செய்தான்.

மறுநாள் குரு வந்தார். மன்னன் மகிழ்ச்சியுடன் அவருக்கு தோட்டத்தைச் சுற்றிக் காட்டினான். குரு தன்னை மகிழ்வுடன் பாராட்டுவார் என்று அவன் மிகவும் ஆவலோடு எதிர் பார்த்தான்.

ஆனால் அவர் முகத்தில் எந்தச் சலனமும் இல்லை.

தோட்டம் உயிரோட்டமாக இல்லையே என்றார்.

மன்னன், ‘‘என்ன சொல்லுகிறீர்கள்? புரியவில்லையே? தோட்டம் தூய்மையாகத் தானே இருக்கிறது?” என்றான்.

“எல்லாம் சரிதான். எங்கே அந்த காய்ந்து போன இலையும் பழுத்த சருகும் கருத்த சுள்ளியும்?” என்றார் குரு.

மன்னன் ஏதும் புரியாமல் விழித்தான். குரு வேகமாக அங்கு மிங்கும் ஓடினார். எதையோ பரபரப்பாகத் தேடினார். கடைசியில் கூடையில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த காய்ந்த இலைகளையும், பழுத்த சருகுகளையும் அள்ளி வந்து அங்கே கொட்டினார். அப்போது பார்த்து காற்று சுழன்று வீசியது. வீசிய காற்றில் மஞ்சள் நிறமான பழுத்த இலைகள் தோட்டமெங்கும் சுழன்று பறந்தோடின.

“ஆஹா.! பிரமாதம். இதுதானப்பா இயற்கையான அழகு. இப்போது பார், உன் தோட்டமே உயிரோட்டமுள்ளதாகி விட்டது” என்றார் குதூகலமாக.

காய்ந்த இலைகளும் பழுத்த சருகுகளும் காற்றில் சுழன்று தோட்டம் முழுவதும் பரந்து விரவி கிடந்த காட்சி மன்னனுக்கும் மிகவும் ரம்மியமாகவும் அழகாகவும் தெரிந்தது.

“ஆமாம் குருவே, தோட்டம் இப்போது தான் உயிரோட்டமாக இருக்கிறது” என்றான் மன்னன்.

ஒரு நாள் என்பது வெறும் பகல் மட்டுமல்ல. இரவும் சேர்ந்ததுதான் அது. வாழ்வு என்றால் இன்பம் – துன்பம் உண்டு. பிறப்பை போல் இறப்பும் கூட வாழ்வின் ஓர் அங்கம் தான். இவை அனைத்தும் இன்றி வாழ்க்கை முழுமை பெறாது.

“உயிரோட்டமான மனம் என்பதும் அப்படித்தான் எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் வந்து செல்லவேண்டும். அவற்றை பற்றிப் பிடிக்கவோ அப்புறப்படுத்தவோ தேவையில்லை.” என்றார் குரு.

மன்னன் புரிந்து கொண்டான். மனதை அதன் இயற்கையான இயல்பில் அப்படியே உயிரோட்டமாக விட்டு விட்டான்.

★

“உயிரோட்டமான மனதில் எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் வந்து செல்வதே சரி. அவற்றை பற்றிப் பிடிக்கவோ அப்புறப்படுத்தவோ தேவையில்லை.”



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555